# இறைவனுடன் நீங்கள் பேசுவது எப்படி





## ஸ்ரீ ஸ்ரீ பரமஹம்ஸ யோகானந்தர்

ஒரு யோகியின் சுயசரிதம் எழுதி அருளியவர்



Yogoda Satsanga Society of India
FOUNDED 1917
Paramahansa Yogananda



**ஸ்ரீ ஸ்ரீ பரமஹம்ஸ யோகானந்தர்**

குருதேவர் மற்றும் ஸ்தாபகர்

யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்திய/

ஸெல்ஃப்-ரியலைசேஷன் ஃபெலோஷிப்

You too can talk with God, Learn How.

13/1/05

# இறைவனுடன் நீங்கள் பேசுவது எப்படி

9111



அருளியவர்

ஸ்ரீ ஸ்ரீ பரமஹம்ஸ யோகானந்தர்

Yogoda Satsanga Society of India
FOUNDED 1917
Paramahansa Yogananda

முதல் தமிழ்ப் பதிப்பு, 2003


யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்திய/ ஸெல்ஃப்-ரியலைசேஷன் ஃபெலோஷிப்பின் அதிகாரம் பெற்ற வெளியீடு

இப்புத்தகத்தின் வர்த்தக மேலுறை ஸெல்ஃப்-ரியலைசேஷன் ஃபெலோஷிப்பின் வர்த்தக உரிமைக் குறியாகும்

இந்தியாவில் அச்சிட்டு வெளியிட்டோர்
YOGODA SATSANGA SOCIETY OF INDIA
Yogoda Satsanga Math
21, U.N. Mukherjee Road
Dakshineswar, Kolkata 700076
வினியோகிப்பவர்:


Jaico Publishing House    Manivasagar Pathippagam

இந்தியா முழுவதிலும் உள்ள யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்தியதியாவின் ஆசிரமங்களிலும் மையங்களிலும் கூடக் கிடைக்கும்



# ஸ்ரீ ஸ்ரீ பரமஹம்ஸ யோகானந்தரின் தெய்வீகப் பரம்பரைச் செல்வம்

பரமஹம்ஸ யோகானந்தர் தோன்றி ஒரு நூற்றாண்டிற்குப் பின்னர், நம் காலத்திய ஒப்புயர் வற்ற ஆன்மீக மகாபுருஷர்களில் ஒருவராகக் கருதப்படுகிறார். அவரது வாழ்க்கை மற்றும் பணியின் நல்விளைவு தொடர்ந்து வளர்கிறது. பல ஆண்டுகளுக்கு முன் அவர் அறிமுகப்படுத்திய சமய மற்றும் தத்துவக் கருத்துக்களும், முறை களும் இப்போது கல்வி, உளவியல், வாணிகம், மருத்துவம் இன்னும் பல துறைகளில் பயன் படுத்தப்படுகின்றன—உயர்ந்த மனிதப் பண் புடன் ஆன்மீக நோக்கு பொருந்திய முழுமையான மனித வாழ்க்கைக்கு பல வழிகளில் உதவு கின்றன.

பரமஹம்ஸ யோகானந்தரின் போதனைகள், பல்வேறு துறைகளிலும், பல தத்துவ மற்றும் பரவியல் (metaphysics) இயக்கங்களின் விரிவுரை யாளர்களால் விளக்கப்பட்டும் ஆக்கபூர்வமாகப் பின்பற்றப்பட்டும் வருகின்றன. எனவே இந்த உண்மை, அவர் போதித்தவை பெருமளவில் நடைமுறையில் பயனுள்ளதாக இருப்பதை

சுட்டிக் காட்டுகிறது. அது மட்டுமின்றி, அவர் விட்டுச்சென்ற தெய்வீகப் பரம்பரைச் செல்வம் காலப்போக்கில் தரம் குன்றாமல், பகுக்கப்படாமல் அல்லது திரிக்கப்படாமல் பாதுகாக்கப்படுவதற்குச் சில வழிமுறைகள் அவசியம் எனவும் உணர்த்துகிறது.

பரமஹம்ஸ யோகானந்தரைப் பற்றிய தகவல் கள் பல வழிகளில் பெருகி வருவதால், ஒரு பிரசுரம் அவரது வாழ்க்கையையும் போதனை களையும் சரியாக எடுத்து உரைக்கிறது என்று தாங்கள் எவ்வாறு நிச்சயம் செய்து கொள்ள முடியும் எனச் சில சமயங்களில் வாசகர்கள் விசாரிக்கின்றனர். இவ்விசாரணைகளுக்குப் பதிலாக, பரமஹம்ஸஜி அவரது போதனைகளைப் பரப்பவும், எதிர்காலச் சந்ததிகளுக்காக அவை களின் பரிசுத்தத்தையும் முழுமையையும் பாது காக்கவும் யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்திய/ஸெல்ஃப்-ரியலைசேஷன் ஃபெலோஷிப் இவைகளை நிறுவினார் என நாங்கள் விளக்க விரும்புகிறோம். யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்திய/ஸெல்ஃப்-ரியலைசேஷன் ஃபெலோஷிப்பின் வெளியீடுகள் குழுவிற்குத் தலைமை வகிக்கும் நெருங்கிய சீடர்களைத் தனிப்பட்ட முறையில் தேர்ந்தெடுத்து பயிற்சி அளித்தார். மேலும் அவர்களுக்கு அவரது

சொற்பொழிவுகள், நூல்கள், மற்றும் *யோகதா சத்சங்கப் பாடங்களைத்* தயார் செய்யவும் வெளியிடவும் திட்டவட்டமான வழிமுறைகளை வகுத்துக் கொடுத்தார். இந்த அன்பிற்குரிய உலக ஆசிரியரின் அனைவருக்கும் ஏற்ற உபதேசங்கள், மூல சக்தியுடனும் உண்மையுடனும் இருக்க YSS/SRF வெளியீடுகள் குழுவின் அங்கத்தினர்கள் இவ்வழிமுறைகளைப் புனிதப் பொறுப்பாக மதிக்கின்றனர்.

யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்திய/ ஸெல்ஃப்-ரியலைசேஷன் ஃபெலோஷிப்-இவை களின் பெயரும், YSS/SRF சின்னமும் (மேலே காண்பிக்கப் பட்டுள்ளது) பரமஹம்ஸஜியால் உருவாக்கப் பட்டவை. இவை ஆன்மீக மற்றும் மானிட சேவை புரிய அவர் உலகம் முழுதும் நிறுவிய ஸ்தாபனத்தை அடையாளம் காட்டும். இவை YSS/SRF இன் எல்லாப் புத்தகங்கள், ஒலி/ ஒளிப் பதிவுகள், திரைப்படங்கள் மற்றும் இதர வெளியீடுகளின் மீதும் காணப்படுகின்றன. எனவே இப்பெயரும் சின்னமும் ஸ்ரீ ஸ்ரீ பரமஹம்ஸ யோகானந்தரால் நிறுவப்பட்ட ஸ்தாபனத்தில் இப்பணி ஆரம்பிக்கிறது என்பதையும் அவரது போதனைகள் அவர் எண்ணியபடி சரியாகக் கொடுக்கப்படுகிறது என்பதையும் வாசகர்களுக்கு உறுதி செய்கின்றன.

— யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்திய/ ஸெல்ஃப்-ரியலைசேஷன் ஃபெலோஷிப்

*இறைவனின் மகிமை மகத்தானது. அவன் மெய்யானவன், மேலும் அவனை அடைய முடியும்....அமைதியாகவும் நிச்சயமாகவும் நீங்கள் வாழ்க்கைப் பாதையில் நடந்து செல்லும்போது, உங்களைத் திருப்திப்படுத்தும் ஒரே பொருள், ஒரே குறிக்கோள் இறைவன்தான் என்ற அனுபூதியை நீங்கள் பெற்றுத்தான் ஆக வேண்டும்; ஏனெனில் இதயத்தின் ஒவ்வொரு ஆசைக்கும் பதில் இறைவனிடத்தில் உள்ளது.*

— *ஸ்ரீ ஸ்ரீ பரமஹம்ஸ யோகானந்தர்*

# இறைவனுடன் நீங்கள் பேசுவது எப்படி

இறைவனுடன் பேசுவது என்பது ஒரு தீர்க்கமான உண்மை. இந்தியாவில் மகான்கள் இறைவனுடன் பேசிக் கொண்டிருந்த பொழுது நான் அவர்கள் முன்னிலையில் இருந்திருக்கிறேன். மேலும் நீங்கள் அனைவரும் கூட இறைவனுடன் தொடர்பு கொள்ள முடியும்; அதாவது நீங்கள் மட்டும் ஒரு பட்சமாய் பேசுவது அல்ல, ஆனால் உண்மையாகவே நீங்கள் இறைவனுடன் பேசலாம், இறைவன் மறுமொழி கூறுவதையும் கேட்கலாம். ஒவ்வொருவரும் பரம்பொருளுடன் நிச்சயமாகப் பேச முடியும். ஆனால் இன்று, நமக்கு பதிலளிப்பதற்கு கடவுளை எவ்வாறு இணங்க வைக்கலாம் என்று நான் பேசப் போகிறேன்.

நாம் ஏன் சந்தேகப்பட வேண்டும்? உலகத்திலுள்ள மத நூல்களில் இறைவனுக்கும், மனிதனுக்கும் நடந்த உரையாடல்கள் பற்றிய விளக்கங்கள் மிகுந்திருக்கின்றன. அவற்றுள் மிக அழகாக உள்ள ஒரு நிகழ்ச்சியானது பைபிளில் I இராஜாக்கள் 3:5-13ல் விவரிக்கப்பட்டுள்ளது:

"கர்த்தர் சாலொமோனுக்கு இராத்திரியில் சொப்பனத்திலே தரிசனமாகி; நீ விரும்புகிறதை என்னிடத்தில் கேள் என்று தேவன் சொன்னார். அதற்குச் சாலொமோன்....ஆகையால் அடியேனுக்கு ஞானமுள்ள இருதயத்தைத் தந்தருளும் என்றான்....தேவன் அவனை நோக்கி: நீ உனக்கு நீடித்த நாட்களைக் கேளாமலும், ஐசுவரியத்தைக் கேளாமலும், உன் சத்துருக் களின் பிராணனைக் கேளாமலும், நீ இந்தக் காரியத்தையே கேட்டு, நியாயம் விசாரிக்கிறதற்கு ஏற்ற ஞானத்தை உனக்கு வேண்டிக் கொண்ட படியினால், உன் வார்த்தைகளின்படி செய்தேன்; ஞானமும் உணர்வுமுள்ள இருதயத்தை உனக் குத் தந்தேன்;....நீ கேளாத ஐசுவரியத்தையும் மகிமையையும் உனக்குத் தந்தேன்."

தாவீது கூட இறைவனுடன் அனேகமுறை உரையாடி இருக்கிறார், மற்றும் அவனுடன் பல உலக நடைமுறை விஷயங்களையும் பற்றி பேசி இருக்கிறார். "பெலிஸ்தருக்கு விரோதமாகப் போகலாமா, அவர்களை என் கையில் ஒப்புக் கொடுப்பீரா என்று தாவீது தேவனைக் கேட்ட போது, கர்த்தர் : போ, அவர்களை உன் கையில் ஒப்புக் கொடுப்பேன் என்றார்."*

---

* *I நாளாகமம்* 14:10 (பைபிள்)

# அன்பினால் மட்டுமே இறைவன் இளகுவான்

சராசரி மனிதன் இறைவனை இதயத் தாபத்துடன் அல்லாமல், மனத்தளவில்தான் பிரார்த்திக்கிறான். இப்படிப்பட்ட பிரார்த்தனைகள் எந்தப் பதிலையும் பெறுவதற்கு வலிமை அற்றவை. நாம் நம்பிக்கையுடனும் நெருக்கமான உணர்வுடனும் எப்படி, தாய் அல்லது தந்தை யாரிடம் பேசுகிறோமோ அவ்வாறே பரமாத்மாவு டன் பேச வேண்டும். இறைவனுடன் நம்முடைய உறவு எந்தவிதமான நிபந்தனைகளும் இல்லாத அன்பாக இருக்க வேண்டும். வேறு எந்த விதமான உறவையும் விட நாம் உரிமையுடனும் இயல்பாகவும் பரமாத்மாவிடமிருந்து அதன் தெய்வத்தாய் ரூபத்தில் பதிலைக் கோரலாம். இப்படிப்பட்ட கோரிக்கைகளுக்கு கடவுள் பதில் அளிக்க கட்டாயப்படுத்தப்படுகிறார்; ஏனெனில் தன் குழந்தை எப்படிப்பட்ட பாவியாக இருப்பினும் அவனிடம் அன்பும் மன்னிப்பும் காட்டுவதே ஒரு தாயின் பண்பாகும். இறைவன் நமக்கு அளித்துள்ளவற்றில், தாய்க்கும் குழந்தைக்கும் இடையே உள்ள உறவுதான் மனித அன்பின் மிகவும் அழகான வடிவமாகும்.

இறைவனைப் பற்றிய ஒரு நிச்சயமான கருத்து (தெய்வத்தாய் என்பது போன்ற) மிகவும் அவசியம், இல்லையெனில் ஒரு தெளிவான பதில் வேண்டும் என்ற கோரிக்கை மிகவும் வலிமையாக இருக்க வேண்டும்; அரை-குறை நம்பிக்கையுடன் செய்யும் பிரார்த்தனை போது மானதல்ல. நீங்கள் உங்கள் மனத்தில் தீர்மானித் துக்கொண்டால்: "இறைவன் என்னுடன் பேசப் போகிறான்" என்று; எத்தனை வருடங்கள் ஆனா லும் அவன் உங்களுக்குப் பதில் அளிக்காமல் இருந்தால்கூட, நீங்கள் வேறுவிதமாக நினைக்க மறுத்தால்; நீங்கள் அவன் மீது முழு நம்பிக்கை யுடன் இருந்தால், ஒரு நாள் அவன் நிச்சயமாக மறுமொழி கூறுவான்.

நான் இறைவனுடன் அனேக சந்தர்ப்பங்களில் பேசியுள்ளவற்றில் சிலவற்றைப் பற்றி *ஒரு யோகியின் சுயசரிதத்தில்* எழுதியிருக்கிறேன். நான் சிறு குழந்தையாக இருந்த பொழுது இறைவனின் குரலைக் கேட்கும் முதல் அனுபவம் ஏற்பட்டது. ஓர் அதிகாலையில் நான் என் படுக்கையில் உட்கார்ந்து இருந்த பொழுது, ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கி விட்டேன்.

"மூடிய கண்களின் இருளுக்குப் பின்னால் என்ன இருக்கிறது?" இந்த ஆராயும் எண்ணம் என்

மனத்தில் மிகத் தீவிரமாக தோன்றியது. என்னுடைய அகப்பார்வையில் உடனே மிகப் பெரிய ஒளிக்கதிர் வெளிப்பட்டது. என்னுடைய நெற்றிக்குள் ஒளிர்ந்த பெரிய ஒளித்திரையில் மலைக்குகைகளில், தியானத்தில் அமர்ந்திருக்கும் மகான்களின் தெய்வீக உருவங்கள் சிறு சினிமா படங்கள் போலத் தோன்றின.

"யார் நீங்கள்?" நான் உரக்கக் கூறினேன்.

"நாங்கள் இமாலயத்தில் உள்ள யோகிகள்." அத்தெய்வீக விடையை வர்ணிப்பது கடினம்; என் மனம் மகிழ்ச்சியில் துள்ளியது. அத்தோற்றம் மறைந்தது, ஆயினும் அவ்வெள்ளிக் கிரணங்கள் என்றும் விரிந்த வளையங்களாகி எல்லை இல்லாமல் பரந்தன.

"இந்த அதிசய ஒளி யாது?" நான் கேட்டேன்.

"நான் ஈஸ்வரன் (இறைவன்). நான் ஒளி." அக்குரல் மேகங்களின் முழக்கம் போல் இருந்தது.

எனக்கு இந்த சிறுவயது அனுபவம் ஏற்பட்ட பொழுது என் தாயாரும், மூத்த சகோதரி ரோமா வும் அருகில் இருந்தார்கள், மேலும் அவர்களும் கூட இந்தத் தெய்வீகக்குரலைக் கேட்டனர். இறைவனுடைய மறுமொழியைக் கேட்டு அடைந்த ஆனந்தப் பரவசத்தில் நான்

இறைவனுடன் ஒன்றாகக் கலக்கும் வரை அவனைத் தேட வேண்டும் என அங்கேயே, அப்பொழுதே தீர்மானித்தேன்.

மூடிய கண்களுக்குப் பின்னால் ஒரே இருள் மயம்தான் என்று அனேகர் நினைக்கின்றனர். ஆனால் நீங்கள் ஆன்மீகத்தில் முன்னேறி, நெற்றிக் கண்ணில் எண்ணத்தை ஒருமுகப்படுத் தினால், உங்கள் அகப்பார்வை திறப்பதை நீங்கள் காணலாம். நீங்கள் அனேக ஒளிகள் உடையதும் மிக அழகானதுமான வேறொரு உலகைக் காண்பீர்கள். மகான்களின் காட்சிகள், நான் கண்ட இமயமலை யோகிகளுடையது போல், உங்கள் முன்னர் தோன்றும். உங்களுடைய ஒருமுகப்படுத்தல் இன்னும் ஆழ்ந்தால், நீங்களும் இறைவனின் குரலைக் கேட்கலாம்.

இறைவன் நம்முடன் தொடர்பு கொள்வான் என்னும் அவனுடைய உறுதிமொழியை மத நூல்கள் நமக்குத் திரும்பத் திரும்பக் கூறுகின் றன. “உங்கள் முழு இருதயத்தோடும் என்னைத் தேடினீர்களானால், என்னைத் தேடுகையில் கண்டுபிடிப்பீர்கள்.”—ஏரேமியா 29:13 (பைபிள்). “நீங்கள் கர்த்தரோடிருந்தால், அவர் உங்களோடிருப்பார்; நீங்கள் அவரைத் தேடினால், உங்களுக்கு வெளிப்படுவார்; அவரை

விட்டீர்களேயாகில், அவர் உங்களை விட்டு விடுவார்."—II நாளாகமம் 15:2 (பைபிள்). "இதோ, வாசற்படியிலே நின்று தட்டுகிறேன்; ஒருவன் என் சத்தத்தைக் கேட்டு, கதவைத் திறந்தால், அவனிடத்தில் நான் பிரவேசித்து, அவனோடே போஜனம் பண்ணுவேன், அவனும் என்னோடே போஜனம் பண்ணுவான்."— வெளிப்படுத்தின விசேஷம் 3:20 (பைபிள்).

நீங்கள் ஒரே ஒரு முறை இறைவனுடன் தொடர்பு கொண்டுவிட்டால், அவனுடைய மௌனத்தைக் கலைத்துவிட்டால், அவன் அடிக்கடி உங்களுடன் பேசுவான். ஆனால் ஆரம்பத்தில் இது மிகவும் கடினம்; இறைவனுடன் பரிச்சயம் செய்து கொள்வது சுலபமல்ல, ஏனெனில் அவனை அறிந்துக் கொள்ள உங்களுக்கு உண்மையிலேயே விருப்பம் உண்டா என்பதை அவன் நிச்சயப்படுத்திக் கொள்ள விரும்புகிறான். பக்தன் தன்னை விரும்புகிறானா, இல்லை வேறு எதையாவதை விரும்புகிறானா என்பதை அறிய அவன் சோதனைகளைக் கொடுக்கிறான். உங்களுடைய இதயத்தில் வேறு எந்த விதமான ஆசையும் மறைந்திருக்கவில்லை என்று அவனை நீங்கள் நம்ப வைக்கும் வரை அவன் உங்களுடன் பேச மாட்டான். அவனுடைய

பரிசுகளுக்கான ஏக்கங்களால் மட்டுமே உங்கள் இதயம் நிறைந்திருந்தால், அவன் ஏன் உங்களுக்கு தரிசனம் கொடுக்க வேண்டும்?

## மனிதனுடைய அன்புதான் அவன் இறைவனுக்கு அளிக்கும் ஒரே பரிசு

மனிதனை சோதிப்பதற்காகவே முழுப் படைப்பும் திட்டமிடப்பட்டுள்ளது. உலகில் நம்முடைய நடத்தையின் மூலம் இறைவனை விரும்புகிறோமா அல்லது அவனுடைய பரிசுப் பொருட்களை விரும்புகிறோமா என்பதை நாம் வெளிப்படுத்துகிறோம். நீங்கள் எல்லாவற்றையும் விட இறைவனைத்தான் விரும்ப வேண்டும் என்று அவன் உங்களிடம் கூறமாட்டான், ஏனெனில் எந்த விதமான “தூண்டலும்” இல்லாமல் உங்களுடைய அன்பு நிபந்தனையின்றி கொடுக்கப்பட வேண்டும் என்று அவன் விரும்புகிறான். இந்தப் பிரபஞ்ச லீலையின் முழு ரகசியமும் இதுதான். நம்மைப் படைத்தவன் நமது அன்புக்காக ஏங்குகிறான். அவன் கேட்காமலேயே நாமாகவே முன்வந்து அதை அளிக்க வேண்டும் என அவன் விரும்புகிறான். இறைவனிடம் இல்லாத ஒரே பொருள் நமது அன்புதான். நாமே அந்த அன்பை

அவனுக்கு விரும்பி அளிக்காவிடில், அவன் அதைப் பெறமாட்டான். எனவே, பாருங்கள், இறைவன் கூட ஏதோ ஒன்றை அடைய வேண்டியுள்ளது: நமது அன்பு. மேலும் நாமும் அதை இறைவனுக்கு வழங்கும் வரை மகிழ்ச்சி அடையவே மாட்டோம். இந்த உலகப்பந்தில் ஊர்ந்து செல்லும் சிறுமனிதர்களாக, இறைவனது பரிசுப் பொருட் களுக்காக மட்டுமே அழுது கொண்டு, பரிசளிப் பவனை மறந்துவிட்ட வழிதடுமாறிய குழந்தை களாக இருக்கும் வரை நாம் அனேகத் துன்பக் குழிகளில் விழுகிறோம்.

இறைவன்தான் நம்முடைய இருப்பின் சாரமாக இருப்பதால், நம்முள் அவனுடைய இருப்பை உணர்ந்து அறியும் வரை, நமது சுயரூபத்தை உண்மையாக வெளிப்படுத்த இயலாது. இதுதான் உண்மை. நாம் தெய்வத் தன்மை பொருந்தியவர்களாக, அவனுடைய ஓர் அங்கமாக இருப்பதனால், லௌகீக விஷயங் களில் நாம் நிரந்தரமான திருப்தியைக் காண முடிவதில்லை. “எனக்கு அடைக்கலம் அளிக்காதவனுக்கு எதுவும் அடைக்கலம் அளிக்காது.”*

---

* சுவர்க்கத்தின் வேட்டை நாய், ஃபிரான்சிஸ் தாம்ஸன் எழுதியது.

நீங்கள் இறைவனில் திருப்தி அடையும்வரை, வேறு எதிலிருந்தும் நீங்கள் திருப்தியைக் காண முடியாது.

## இறைவன் உருவம் உள்ளவனா அல்லது அருவமானவனா?

கடவுள் உருவம் உள்ளவனா அல்லது அருவமானவனா? இறைவனுடன் தொடர்பு கொள்வதற்கு எடுக்கும் உங்கள் முயற்சிகளில் இதைப் பற்றிய ஒரு சிறு விவாதம் உங்களுக்கு உதவியாக இருக்கும். அனேகர் இறைவன் உருவம் உள்ளவன் என நினைக்கவே விரும்புவதில்லை; அவர்கள், இறைவனுக்கு மனிதப்பண்பு அல்லது மனித வடிவம் கற்பிக்கின்ற கருத்து எல்லைக்குட்பட்டது என்று எண்ணுகிறார்கள். அவர்கள் அவனை அருவமான பரமாத்மா என்றும், எல்லாம் வல்ல சக்தி என்றும் இப் பிரபஞ்சத்திற்குப் பொறுப்பான ஒரு விவேகமான ஆற்றல் என்றும் கருதுகிறார்கள்.

ஆனால் நம்மைப் படைத்தவன், அருவமானவன் என்றால் எப்படி அவன் மனிதர்களைப் படைத்தான்? நாம் உருவம் உள்ளவர்கள்; நமக்கென்று தனித்தன்மை இருக்கிறது. நாம்

நினைக்கின்றோம், உணர்கின்றோம், இச்சா சக்தியை உபயோகிக்கின்றோம்; மேலும் இறைவன் நமக்கு, மற்றவர்களுடைய எண்ணங் களையும், உணர்ச்சிகளையும் மதிப்பிடும் சக்தியை மட்டுமல்லாமல் அவற்றிற்கு பதிலளிக் கும் சக்தியையும் கூட அளித்திருக்கிறான். இறைவனுடைய சொந்த ஜீவராசிகளை வாழ வைக்கும் பரஸ்பர உணர்வானது, அவனிடத்தில் நிச்சயமாக இல்லாமல் இல்லை. நாம் அதை அனுமதித்தால் நம்முடைய பரமபிதாவானவன் நம் ஒவ்வொருவருடனும் தனிப்பட்ட உறவை நிறுவ முடியும்; நிறுவுவான்.

இறைவனின் அருவத் தன்மையை எண்ணிப் பார்க்கும் பொழுது, அவன் வெகு தொலைவில் உள்ளவன், நம்முடைய பிரார்த்தனை-எண்ணங்களுக்கு விடையளிக்காமல் அவற்றை வெறுமனே பெறுபவன்; அவன் எல்லாவற்றையும் அறிந்தவன், ஆனால் இதயமில்லாத மௌனத்தைக் காப்பவன் என்ற கருத்து நமக்குத் தோன்றுகிறது. ஆனால் இது தத்துவ ரீதியான தவறு, ஏனெனில் கடவுள்தான் எல்லாமே: அதாவது உருவம் உள்ளவன் மேலும் அருவமானவனும் கூட. அவன் உருவமுள்ள மனிதர்களைப் படைத்தான். அவர்களைப்

படைத்தவன் முழுவதுமாக அருவமாக இருக்க முடியாது.

இறைவன் மனித உருவம் எடுப்பான், நம்மிடம் வருவான், மேலும் நம்முடன் பேசுவான் என்று எண்ணுவது நம்முடைய இதயங்களின் ஓர் ஆழ்ந்த தேவையைப் பூர்த்தி செய்கிறது. அவர் ஏன் அவ்வாறு ஒவ்வொருவருக்கும் செய்வதில்லை? அனேக மகான்கள் இறைவனின் குரலைக் கேட்டிருக்கிறார்கள். ஏன் உங்களால் முடியாது? "இறைவா, நீ கண்ணுக்குப் புலப்படாதவன், அருவமானவன், தெரியாதவன், மேலும் தெரிந்துக் கொள்ள முடியாதவன்; இருந்தாலும் என்னுடைய பக்தி என்னும் உறைபனி மூலமாக உன்னை ஓர் உருவமாக 'உறைய' வைக்க முடியும் என்று நான் நம்புகிறேன்." உங்களுடைய தீவிர பக்தியின் மூலம் இறைவனை ஒரு தனிப்பட்ட உருவம் எடுத்துக் கொள்ள இணங்க வைக்க முடியும். நீங்கள் ஆழ்ந்து பிரார்த்தனை செய்தால், அஸிசியைச் சேர்ந்த செயின்ட் ஃபிரான்சிஸ் மற்றும் அனேக மகான்கள் போல், கிறிஸ்துவின் உயிருள்ள உடலை நீங்கள் பார்க்கலாம். ஏசு, இறைவனுடைய அவதாரம். பிரம்மத்தை (இறைவன்) யார் அறிகிறார்களோ அவர் தானே பிரம்மம் ஆவார். "நானும் என் பிதாவும் ஒன்றா



ஸ்ரீ ஸ்ரீ மகாவதார பாபாஜி
ஸ்ரீ ஸ்ரீ லாஹிரி மகாசயரின் குரு



ஸ்ரீ ஸ்ரீ லாஹிரி மகாசயர்
(சியாமா சரண் லாஹிரி)
ஸ்ரீ ஸ்ரீ ஸ்வாமி ஸ்ரீ யுக்தேஸ்வர்
கிரியின் குரு



ஸ்ரீ ஸ்ரீ ஸ்வாமி
ஸ்ரீ யுக்தேஸ்வர் கிரி
ஸ்ரீ ஸ்ரீ பரமஹம்ஸ யோகனந்தரின்
குரு



**ஸ்ரீ ஸ்ரீ தயா மாதா**

சங்கமாதா மற்றும் தலைவி
யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்திய/
ஸெல்ஃப்-ரியலைசேஷன் ஃபெலோஷிப்

யிருக்கிறோம்,"* என்று கிறிஸ்து கூறவில்லையா? ஆதி சங்கரர் கூட பறைசாற்றுகிறார்: "நான் ஆத்மா" மற்றும் "நீ அதுவே தான்." பல மகான் களின் கூற்று எல்லா மனிதர்களும் இறைவனின் பிரதிபிம்பமாகப் படைக்கப்பட்டுள்ளார்கள் என்பதே.

என் அறிவை, புத்தகங்களிலிருந்து பெறு வதை விட அதிகமாக நான் இறைவனிடமிருந்து பெறுகிறேன். நான் படிப்பது அரிது. நான் நேரடியாக உணர்ந்திருப்பதைத்தான் உங்களுக் குக் கூறுகிறேன். அதனால்தான் நான் அதிகாரத் துடன் பேசுகிறேன், அதாவது சத்தியத்தை நேரடியாக உணர்ந்த அதிகாரம். முழு உலகத்தின் கருத்தும் இதற்கு எதிரானதாக இருக்கலாம், ஆனால் நேரடியாக உணர்ந்ததால் ஏற்பட்ட அதிகாரம் எப்பொழுதுமே இறுதியாக ஒப்புக் கொள்ளப்படும்.

## "இறைவனின் பிரதிபிம்பம்" என்பதன் பொருள்

பைபிளில் நாம் படிக்கிறோம்: "மனுஷன் தேவசாயலில் தேவனால் உண்டாக்கப்

---

* *யோவான்* 10:30.

பட்டான்."* மனிதன் எந்த வகைகளில் இறைவனின் பிரதிபிம்பமாக இருக்கிறான் என்பதை யாருமே இதுவரை முழுவதுமாக விவரிக்கவில்லை. இறைவன் பிரம்மம்; மனிதனும் அவனுடைய அடிப்படைத் தன்மையில் பிரம்மம்தான். அதுதான் இந்த பைபிள் வாசகத்தின் முக்கியமான பொருளாகும். ஆனால் மேலும் பல உண்மையான விளக்கங்களும் கூட உள்ளன.

மனித சரீரம் முழுவதும், அதிலுள்ள உணர்வும் அசைவும் இறைவனின் சிறுபிண்டப் (microcosmic) பிரதிநிதி ஆகும். உணர்வு நிலையில்தான் எல்லாம்-அறிந்ததும், எங்கும்-வியாபித்திருப்பதும் உள்ளது. நீங்கள் துருவ நட்சத்திரத்திலோ அல்லது செவ்வாய் கிரகத்திலோ இருப்பதாக உடனே நினைக்கலாம். எண்ணத்தில், உங்களுக்கும் வேறு எதற்கும் இடையே இடைவெளி இல்லை. எனவே, மனிதனுக்குள் உள்ள இந்த உணர்வு நிலையின் தகுதியினால், அவன் இறைவனின் பிரதிபிம்பமாகப் படைக்கப்பட்டிருக்கிறான் என்று கூறலாம்.

உணர்வுநிலை தன்னைத் தானே அறிந்து கொள்கிறது; அது உள்ளுணர்வின் மூலம்

---

* *ஆதியாகமம்* 9:6.

தன்னையே உணர்கிறது. இறைவன், பிரபஞ்ச உணர்வு மூலமாக, படைப்பின் ஒவ்வொரு அணுவிலும் தன்னைத் தானே அறிந்து இருக்கிறான். "ஒரு காசுக்கு இரண்டு அடைக்கலான் குருவிகளை விற்கிறார்கள் அல்லவா? ஆயினும் உங்கள் பிதாவின் சித்தமில்லாமல், அவைகளில் ஒன்றாகிலும் தரையிலே விழாது."*

மனிதனுக்கும் கூட பிரபஞ்ச உணர்வுநிலை என்னும் சக்தி இயற்கையிலேயே இருக்கிறது என்றாலும், ஒரு சிலர்தான் அதை விருத்தி செய்து கொள்கிறார்கள். மனிதனுக்கும், படைப்பவனைப் போல், உலகங்களை கணத்தில் படைக்கும் இச்சாசக்தி இருக்கிறது; ஆனால் சிலர்தான் தங்களுக்குள் உள்ள இந்த சக்தியை விருத்தி செய்து கொள்கிறார்கள். பிராணிகள் பகுத்தறிய முடியாது, ஆனால் மனிதனால் முடியும். இறைவனுக்கு உள்ள எல்லா குணங்களும் — உணர்வுநிலை, பகுத்தறிவு, இச்சாசக்தி, உணர்ச்சி, அன்பு —மனிதனுக்கும் இருக்கின்றன. இப்படிப்பட்ட குணாதிசயங்களில் மனிதன், இறைவனின் பிரதிபிம்பமாகப் படைக்கப் பட்டிருக்கிறான் என்று கூறலாம்.

---

* *மத்தேயு* 10:29 (பைபிள்).

## ஸ்தூல உடலானது சடப்பொருள் அல்ல, ஆனால் சக்திதான்

நாம் சரீரத்தில் உணர்கின்ற சக்தியானது, ஒரு ஸ்தூல சரீர வாகனத்தை இயக்குவதற்கு மட்டுமே தேவையானதை விட அதிகமாகப் பரந்தகன்ற ஆற்றல் உள்ளதை உணர்த்துகின்றது. அண்ட சராசரங்களை காத்து இயக்கும் பிரபஞ்ச சக்தியின் ஆற்றலானது, நம் உடல்களிலும் கூட அதிர்ந்து கொண்டிருக்கிறது. பிரபஞ்ச சக்தியானது இறைவனின் ஓர் அம்சமாகும். எனவே நாம் ஸ்தூல நோக்கிலும் கூட இறைவனின் பிரதிபிம்பமாகப் படைக்கப்பட்டிருக்கிறோம்.

நம் சரீரத்தில் உள்ள சக்திதான் என்ன? நம் ஸ்தூல வடிவம், மூலக்கூறுகளால் ஆனது, மூலக்கூறுகள் அணுக்களால் ஆனவை, அணுக்கள் மின்துகள்களால் ஆனவை. மின்துகள்கள் பிராணசக்தி அல்லது "உயிர்த்துகள்கள்"—எண்ணில் அடங்காத கோடிக்கணக்கான சக்தி துகள்களால் ஆனவை. உங்களுடைய ஆன்மீகக் கண்ணின் உதவியுடன், உங்கள் சரீரமானது மினுமினுக்கும் ஒளித்துகள்களின்—உங்கள் உடலிலுள்ள இருபத்தி ஏழாயிரம் பில்லியன் (ஒரு பில்லியன்=நூறு கோடி) செல்களிலிருந்து

எழுகின்ற ஆற்றலின்—ஒரு திரள் என்பதைக் காணலாம். மாயையினால்தான் நீங்கள் சரீரத்தை ஒரு சதைப் பிண்டமாகப் பார்க்கிறீர்கள். உண்மையில் அது சடப் பொருள் அல்ல, ஆனால் சக்திதான்.

நீங்கள் சதையினாலும் இரத்தத்தினாலும் ஆக்கப்பட்டிருக்கிறீர்கள் என்று நினைப்பதால், சில நேரங்களில் உங்களை பலவீனன் என்று நீங்கள் கற்பனை செய்கிறீர்கள். ஆனால் உங்கள் உடம்பில் இறை உணர்வை பதிவு செய்தால், இந்தச் சதையானது நிலம், நீர், நெருப்பு, காற்று, மற்றும் ஆகாயம் ஆகிய பஞ்ச அதிர்வலைகளால் ஆன ஒரு ஸ்தூல படைப்பே தவிர வேறு அல்ல என்பதை அறிந்து கொள்வீர்கள்.

## மனித சரீரம் பிரபஞ்சத்தின் பஞ்ச-பூதங்களால் ஆக்கப்பட்டது

இந்த முழுப் பிரபஞ்சமும்—அதாவது இறைவனின் சரீரம் — மனிதனின் சரீரம் ஆக்கப் பட்டிருக்கும் அதே ஐந்து தத்துவங்களால் ஆக்கப்பட்டுள்ளது. நட்சத்திரத்தைப் போன்ற வடிவம் உள்ள மனித சரீரம், இந்த ஐந்து தத்துவங்களின் கதிர்களைக் குறிக்கின்றன. தலையும், இரண்டு கைகளும், இரண்டு

கால்களும் நட்சத்திரத்தின் ஐந்து முனைகளாக அமைந்துள்ளன. எனவே இந்த வகையில் கூட, நாம் இறைவனின் பிரதிபிம்பமாகப் படைக்கப் பட்டிருக்கிறோம்.

ஐந்து விரல்களும் கூட, படைப்பின் கட்டமைப்பைப் பராமரிக்கும் பிரபஞ்ச விவேக அதிர்வலையின் ஐந்து அதிர்வுடைய தத்துவங் களைக் குறிக்கின்றன. கட்டை விரலானது பெரும் பருமன் வாய்ந்த அதிர்வு தத்துவமான நிலத்தைக் குறிக்கிறது; அதனால்தான் அவ்விரல் தடிமனாக இருக்கிறது. ஆள்காட்டி விரல் நீர் தத்துவத்தைக் குறிக்கிறது; நடு விரல் விரைவில் பாயக்கூடிய நெருப்பு தத்துவத்தைக் குறிக்கிறது. எனவே அது மிக நீண்டதாக இருக்கிறது. மோதிர விரல் காற்றைக் குறிக்கிறது. மிகச்சிறிய சுண்டு விரலானது ஆகாயத்தைக் குறிக்கிறது; எனவே தான் அது மிக நுட்பமாக இருக்கிறது.

ஒவ்வொரு விரலையும் அழுத்தித் தேய்ப் பதால், எந்த விரல் எந்த தத்துவத்தைக் குறிக் கின்றதோ அதன் சக்தியை ஊக்குவிக்கிறது. ஆகையால் நடு விரலையும் (நெருப்பு தத்துவத் தைக் குறிப்பது) நாபியையும் (தண்டுவடத்தில் மணி பூரகம் அல்லது "நெருப்பு" மையத்திற்கு எதிரில் அமைந்து, ஜீரணத்தையும் உட்கிரகித்

தலையும் செயலாற்றும் பகுதி) தேய்ப்பதானது, அஜீரணத்தைச் சீராக்க உதவி புரியும்.

இறைவன் படைப்பில் அசைவை வெளிப் படுத்துகிறான். அசைவை வெளிக்காட்ட வேண்டும் என்ற தூண்டுதலால் மனிதன் கால்களையும் பாதங்களையும் வளரச் செய்து கொண்டுள்ளான். பாத விரல்கள், சக்தியின் ஐந்து கதிர்களின் ஸ்தூலத் தோற்றங்களாகும்.

கண்களின் கண்மணி, கருவிழி மற்றும் வெண்மைப் படலம் இறைவனின் சத், தத், ஓம், (பிதா, மகன், மற்றும் பரிசுத்த ஆவி) இவற்றைக் குறிப்பாக உணர்த்தும் சின்னங்கள். நீங்கள் புருவங்களுக்கு இடையில் ஒருமுகப்படும் பொழுது, இரண்டு கண்களிலிருந்தும் புறப்படும் மின்சக்தியானது ஒரே ஒளியாகப் பிரதிபலித்து, நீங்கள் ஆன்மீகக் கண்ணை காண்கிறீர்கள். இந்தத் திவ்விய கண்தான், "இறைவனின் விழி" ஆகும். நம் துவைதப் பிரபஞ்சத்தில் நிலவும் சார்பியல் கோட்பாட்டினால் நாம் இரண்டு கண்களை வளர்த்து கொண்டிருக்கிறோம். ஏசு கூறியுள்ளார், "உன் கண் ஒன்றாக இருந்தால், உன் சரீரம் முழுவதும் வெளிச்சமாயிருக்கும்."*

---

* *மத்தேயு* 6:22.

இறைவனின் நெற்றிக் கண்ணாகிய இந்த ஆன்மீகக் கண் மூலமாக நாம் பார்த்தோமானால், எல்லா படைப்பும் ஒரே பொருளினால், அதாவது அவனுடைய ஒளியினால் மட்டுமே படைக்கப் பட்டுள்ளது என்று உணரலாம்.

## இறைவனுடன் ஒன்றுதல், இறைவனுடைய சக்தியுடன் ஒன்றுதலாகும்

இறுதிக் கருத்தின்படி மனிதனுக்கு எல்லா சக்தியும் உண்டு. இறைவனின் உணர்வு நிலையுடன் உங்கள் உணர்வுநிலை ஒன்றானால், நீங்கள் எதை மாற்ற விரும்பினாலும் மாற்ற முடியும். மோட்டார் வாகனத்தின் பாகங்களை, (தேவைக் கேற்றபடி) வேறு பாகங்களைக் கொண்டு மாற்றிக் கொள்ளவோ அல்லது புதுப்பிக்கவோ முடியும்; ஆனால் ஸ்தூல சரீரத்தில் அதைப் போன்ற ஒரு மாற்றத்தை நிகழச் செய்வது மிகவும் சிக்கலானதாகும். எல்லாச் செல்களையும் கட்டுப்படுத்தும் மனம்தான், அடிப்படையான காரணி ஆகும். ஒருவன், மனத்தை முழு கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்து விட்டால், அவனுடைய சரீர செல்களையும், பாகங்களையும், எத்தனை தடவை விரும்பினாலும், நினைத்தவுடன்

மாற்றிக் கொள்ளவோ அல்லது புதுப்பிக்கவோ முடியும். உதாரணமாக, அவன் ஒரு எண்ணத்தின் மூலமே, அணுக்களை மாற்றி ஒரு முழுப் புதுப் பல் வரிசையையே உண்டாக்க முடியும். ஒருவன் ஆன்மீகத்தில் முன்னேற்றம் அடைந்தால், சடப் பொருள்களின் மீது முழுமையான ஆதிக்கம் உண்டாகிறது.

இறைவன் பரமாத்மா ஆவான்; அருவமான அவன், கண்ணுக்குப் புலப்படாதவன். ஆனால் இந்த ஸ்தூல உலகை அவன் படைத்த பொழுது, அவன் பரமபிதாவானான். படைப்பவன் என்ற பாகத்தை ஏற்றவுடன் அவன் கண்ணுக்குப் புலப்பட்டவன் ஆனான்; இந்தப் பிரபஞ்சம் முழுவதுமே இறைவனின் சரீரம்தான்.

பூமியின் வடிவத்தில் அவனுக்கு நேர் மற்றும் எதிர்ப்பக்கம்—வடக்கு மற்றும் தெற்கு துருவங்கள் உண்டு. நட்சத்திரங்கள் அவனுடைய கண்கள், புல்பூண்டுகளும் மரங்களும் அவனுடைய கேசம் மற்றும் நதிகள் அவனுடைய இரத்த ஓட்டமாகும். சமுத்திரத்தின் இரைச்சல், வானம்பாடியின் கானம், பிறந்த குழந்தையின் அழுகுரல் மற்றும் படைப்பின் பிற ஒலிகள் எல்லாம் அவனுடைய குரல் ஆகும். இதுதான் உருவம் கொண்டுள்ள இறைவன். எல்லா

இதயங்களுக்கும் பின்னால் ஒலிக்கும் இதயத் துடிப்பு அவனுடைய துடிக்கும் பிரபஞ்ச சக்தி ஆகும். மனித இனத்தின் இருநூற்றி அறுபது கோடி பாதங்களில் அவன் நடக்கிறான். அவன் எல்லா கைகளின் மூலமாகவும் வேலை செய் கிறான். ஒரே இறை உணர்வுதான் எல்லா மூளை களின் மூலமாகவும் வெளிப்படுகிறது.

எப்படிச் சரியான சுற்றுப் பாதையில் நட் சத்திரங்கள் சமநிலையில் வைக்கப்பட்டிருக் கின்றனவோ, அதே மாதிரியாக இறைவனின் கவர்ச்சி மற்றும் விலக்கல் நியதியினால், மனித சரீரத்தின் செல்கள், ஒன்றையொன்று இணக்க மாகப் பற்றிக் கொண்டு உள்ளன. எங்கும்-வியாபித்துள்ள இறைவன், எப்பொழுதும் செயலில் ஈடுபட்டுள்ளான்; ஏதாவது ஒரு வகையில் ஜீவன் இல்லாத இடம் எங்குமே இல்லை. இறைவன் எல்லையில்லாத தாராளத் துடன் இடைவிடாமல் நிலையற்ற வடிவங்களை-அவனுடைய பிரபஞ்ச சக்தியின் முடிவற்ற ரூபங்களை வெளிப்படுத்துகிறான்.

படைக்கும் பொழுது, பரமாத்மாவின் மனத்தில் ஒரு குறிப்பிட்ட கருத்து அல்லது திட்ட அமைப்பு இருந்தது. முதலில் அவன் முழுப் பிரபஞ்சத்தையும் வெளியாக்கினான், பிறகு

மனிதனைப் படைத்தான். கோள்களின் அமைப்பால் ஆன ஸ்தூல சரீரத்தை தனக்காக வடிவமைத்துக் கொண்டதில், இறைவன் வெளிப்படுத்திய மூன்று தன்மைகளாவன: பிரபஞ்ச உணர்வுநிலை, பிரபஞ்ச சக்தி, பிரபஞ்சத் திரள் அல்லது சடப்பொருள்.

இம்மூன்றும் முறையே மனிதனுடைய எண்ணம் அல்லது காரண சரீரம், சூட்சும அல்லது ஆற்றல் சரீரம் மற்றும் ஸ்தூல சரீரத்தை ஒத்து இருக்கின்றன. இவைகளுக்குப் பின் உள்ள ஆத்மா அல்லது உயிர்தான் பிரம்மம் ஆகும்.

பிரம்மம் பேரண்ட (macrocosmic) அளவில் பிரபஞ்ச உணர்வுநிலையாகவும், பிரபஞ்ச சக்தியாகவும், பேரண்டங்களின் சரீரமாகவும், வெளிப்படுகிறது. சிறுபிண்ட (microcosmic) அளவில் மனித உணர்வு நிலையாகவும், மனித சக்தியாகவும், மனித சரீரமாகவும், வெளிப்படுகிறது. எனவே மனிதன் உண்மையாகவே இறைவனின் பிரதிபிம்பமாகப் படைக்கப்பட்டிருக்கிறான் என்பதை மறுபடியும் பார்க்கிறோம்.

## இறைவன் அலையதிர்வுகளின் மூலமாக "பேசுகிறான்"

இறைவன் நமக்கு நிச்சயமாக ஸ்தூல வடிவில்

தோன்றலாம். உங்கள் கற்பனைக் கெட்டாதபடி உருவமானவர். உங்களைப் போலவே அவர் நிஜமானவர் மற்றும் உண்மையானவர். இதைத் தான் நான் இன்று உங்களுக்குக் கூற விரும்பு கிறேன். இறைவன் நமக்கு எப்பொழுதும் பதிலளித்துக் கொண்டுதான் இருக்கிறான். அவனுடைய எண்ண அதிர்வுகள் தொடர்ந்து அனுப்பப்பட்டுக் கொண்டே இருக்கின்றன; இதற்கு சக்தி தேவை; சக்தி ஒலியாக வெளிப் படுகிறது. இங்கே ஒரு மிக முக்கியமான விஷயம் உள்ளது. இறைவன் உணர்வுமயமானவன். இறைவன்தான் சக்தி. "பேசுதல்" என்றால் அலை யதிர்வடைதலாகும். அவனுடைய பிரபஞ்ச சக்தி யின் அலையதிர்வின் மூலமாக அவன் எல்லா நேரத்திலும் பேசிக் கொண்டே இருக்கிறான். அவன் படைப்பின் அன்னையாக ஆகி, தானாகவே நிலமாக, நீராக, நெருப்பாக, காற்றாக மற்றும் ஆகாயமாக உருவெடுத்துக் கொள் கிறான்.

கண்களுக்குப் புலப்படாத அன்னையானவள், கண்களுச்குப் புலப்படும் வடிவங்களாக மலர்கள், மலைகள், சமுத்திரங்கள் மற்றும் நட்சத்திரங் களில் தொடர்ந்து தன்னை வெளிப்படுத்திக் கொண்டே இருக்கிறாள். சடப்பொருள் என்பது

என்ன? அது இறைவனுடைய பிரபஞ்ச சக்தியின் அலையதிர்வின் ஒரு குறிப்பிட்ட வீதம் தவிர வேறு ஒன்றுமில்லை. பிரபஞ்சத்தில் எந்த வடிவமும் உண்மையாகத் திடப்பொருளாக இல்லை. அவ்வாறு தோற்றமளிப்பதானது, அவனுடைய சக்தியின் நெருக்கமாக அல்லது ஸ்தூலமாக அமைக்கப்பட்ட அலையதிர்வுதான். இறைவன் நம்முடன் அலையதிர்வுகள் மூலமாக பேசிக் கொண்டிருக்கிறான். ஆனால் அவனுடன் நேரடியாகத் தொடர்பு கொள்வது எப்படி? என்பதுதான் வினா. எல்லாவற்றையும் விட மிகக் கடினமான காரியம் இதுதான்: இறைவனுடன் பேசுவது.

நீங்கள் ஒரு மலையுடன் பேசினால் அது பதிலளிக்காது. லூதர் பர்பாங்க் செய்தது போல் மலர்களுடன் பேசினால், அவற்றில் சிறிது மறுமொழி இருப்பதை நீங்கள் உணர்வீர்கள். மேலும் மற்றவர்களுடன் நாம் நிச்சயமாகப் பேச முடியும். மலர்களையோ அல்லது மனிதர் களையோ விட விடையிறுக்கும் திறனில் இறைவன் குறைந்தவனா? பின் ஏன் நம்மை அவனுடன் தொடர்ந்து பேசிக் கொண்டே இருக்கச் செய்கிறான், ஆனால் நமக்குப் பதிலளிக்கத் தவறுகிறான்? அப்படித்தான்

தோன்றுகிறது, அல்லவா? ஆனால் பிரச்சனை அவனிடம் இல்லை, நம்மிடம்தான் உள்ளது. நம்முடைய உள்ளுணர்வு என்னும் தொலைபேசி அமைப்பு, சீர்குலைந்து விட்டது. இறைவன் நம்மை அழைக்கிறான், நம்முடன் பேசுகிறான், ஆனால் நாம்தான் அவன் குரலைக் கேட்பதில்லை.

## பிரபஞ்ச அலையதிர்வு எல்லா மொழிகளிலும் "பேசுகிறது"

அனால் மகான்கள் அவனது குரலைக் கேட்கிறார்கள். எனக்குத் தெரிந்த ஒரு மகான் எப்பொழுது பிரார்த்தனை செய்தாலும் இறைவனின் பதிலளிக்கும் குரல் விண்ணிலிருந்து வருவது போல் தோன்றும். பேசுவதற்காக வேண்டி இறைவனுக்கு ஒரு தொண்டை தேவை இல்லை. நீங்கள் மிகவும் திடமாக பிரார்த்தனை செய்தால், அந்தப் பிரார்த்தனையின் அலையதிர்வுகள், உடனே அதிர்வலைப் பதிலைப் பெற்றுத் தரும். நீங்கள் கேட்டுப் பழகி இருக்கும் எந்த மொழியிலும் அது வெளிப்படும். நீங்கள் ஜெர்மன் மொழியில் பிரார்த்தித்தால் ஜெர்மன் மொழியிலேயே நீங்கள் பதிலைக்

கேட்பீர்கள். நீங்கள் ஆங்கிலத்தில் பேசினால், பதிலை நீங்கள் ஆங்கிலத்தில் கேட்பீர்கள்.

பல வகையான மொழிகளின் அலையதிர்வுகள், பிரபஞ்ச அலையதிர்வில்தான் ஆரம்பமாகின்றன. இறைவன், பிரபஞ்ச அலையதிர்வாக இருப்பதால், எல்லா மொழிகளும் தெரிந்தவர். மொழி என்பது என்ன? அது ஒரு விதமான அதிர்வலை. அதிர்வலை என்பது என்ன? அது ஒரு விதமான சக்தி. சக்தி என்பது என்ன? அது ஒரு விதமான எண்ணம்.

இறைவன் நம்முடைய எல்லா பிரார்த்தனைகளையும் கேட்டாலும், அவன் எல்லா சமயத்திலும் மறுமொழி கூறுவதில்லை. நம் நிலைமை எதைப் போன்றது என்றால் தன் தாயாரைக் கூப்பிடும் ஒரு குழந்தையைப் போன்றது. ஆனால் தாயார் வர வேண்டியது அவசியம் என்று நினைப்பதில்லை. அவள் குழந்தையை அமைதிப்படுத்த அவனுக்கு விளையாட்டுப் பொருளை அனுப்புகிறாள். ஆனால் தாயாரின் இருப்பைத் தவிர வேறு எதனாலும் அந்தக் குழந்தை அமைதி அடைய மறுக்கும் பொழுது, அவள் வருகிறாள். நீங்கள் கடவுளை அறிய விரும்பினால், தாயார் வரும்வரை அழுகின்ற அடம் பிடிக்கும் குழந்தையைப் போல் இருக்க வேண்டும்.

நீங்கள் அவளுக்காக அழுவதை நிறுத்தாமலிருக்க உங்கள் மனத்தில் உறுதி பூண்டால், தெய்வத்தாய் உங்களுடன் பேசுவாள். நீங்கள் உங்கள் அழுகைகளில் பிடிவாதமாக இருந்தால், அவள் தன்னுடைய படைப்பென்னும் வீட்டு வேலையில் எவ்வளவு ஈடுபட்டிருந்தாலும் அவள் பேசித்தான் தீர வேண்டும். ஒரு பக்தன், ஒரு கணம் கூட தடைப்படாமல் தீவிர பக்தியுடன் ஓர் இரவு மற்றும் ஒரு பகல் இறைவனுடன் பேசினால், அவன் பதிலளிப்பான் என்று இந்து சாத்திரங்கள் நமக்குக் கூறுகின்றன. ஆனால் யார் அப்படிச் செய்கிறார்கள்! ஒவ்வொரு நாளும் உங்களுக்கு "முக்கியமான நிகழ்ச்சிகள்" — இறைவனிடமிருந்து உங்களை தூரத்திலேயே நிறுத்தும் "பிசாசு" இருக்கின்றன. நீங்கள் வெறுமனே சிறிது பிரார்த்தனை செய்து விட்டு, பின்பு வேறு ஏதாவது விஷயத்தைப் பற்றி எண்ண ஆரம்பித்து விட்டாலும் அல்லது "பரம பிதாவே, நான் உங்களை அழைக்கிறேன், ஆனால் எனக்கு பயங்கரமாகத் தூக்கம் வருகிறது, ஓம், சாந்தி" என்று பிரார்த்தனை செய்தாலும் இறைவன் வரமாட்டான். தூய பவுல் கூறியிருக்கிறார், "இடைவிடாமல் பிரார்த்தனை செய்யுங்கள்."*

---

* *I தெசலோனிக்கேயர்* 5:17 (பைபிள்).

பொறுமையாளரான யோபு இறைவனுடன் நீண்ட உரையாடல்கள் நடத்தினார். யோபு அவனிடம் கூறினார்: “நீர் எனக்குச் செவி கொடும். அப்பொழுது நான் பேசுவேன்; நான் உம்மைக் கேள்வி கேட்பேன், நீர் எனக்கு உத்தரவு சொல்லும். என் காதினால் உம்மைக் குறித்துக் கேள்விப்பட்டேன்; இப்பொழுதோ என் கண் உம்மைக் காண்கிறது.”*

ஓர் அன்பன் தன்னுடைய அன்பை இயந்திர கதியில் வலியுறுத்தும் பொழுது, அவனுடைய வார்த்தைகள் உண்மையல்ல என்று அவனது அன்பிற்குரியவள் அறிவாள்; அவன் இதயத்தில் உண்மையில் என்ன இருக்கிறது என்பதை அவள் “கேட்கிறாள்.” அதே போல், இறைவனின் பக்தர்கள் அவனிடம் பிரார்த்திக்கும் பொழுது, அவர்களுடைய இதயங்களும் மனங்களும் பக்தியின்றி வறண்டு உள்ளனவா என்பதையும், அவர்களுடைய எண்ணங்கள் கட்டுக்கடங்காது எங்கும் அலைபாய்கின்றனவா என்பதையும் அவன் அறிவான்; அரைகுறை அழைப்புகளுக்கு அவன் செவிசாய்க்க மாட்டான். ஆனால் இரவு பகலாக எந்த பக்தர்கள் அதிதீவிரமான பிரார்த்தனையுடன் அவனுடன் பேசுகிறார்களோ, அவர்

* *யோபு* 42:4-5 (பைபிள்).

களுக்கு அவன் தோன்றுகிறான். அவ்வாறான பக்தர்களிடம் அவன் தவறாமல் வருகிறான்.

## மிகஉயர்ந்ததை (இறைவனை) விடக் குறைந்த எதனாலும் திருப்தி அடையாதீர்கள்.

சிறிய பொருட்களைத் தேடுவதில் நேரத்தைச் செலவழிக்க வேண்டாம். இறைவனையே மிக உயர்ந்த பரிசாகப் பெறுவதை விட, அவனிடமிருந்து மற்ற பரிசுகள் பெறுவது இயல்பாகவே சுலபமானது. ஆனால் மிக உயர்ந்ததை விடக் குறைந்த எதனாலும் திருப்தி அடையாதீர்கள். இறைவனிடமிருந்து எனக்கு வந்த பரிசுப் பொருட்களைப் பற்றி-அவற்றிற்குப் பின் கொடுப்பவனாகிய அவனை நான் காண்பதைத் தவிர-நான் அக்கறை காட்டியதில்லை. என் விருப்பங்கள் அனைத்தும் ஏன் நிறைவேற்றப் படுகின்றன? ஏனெனில் நான் ஆழ்ந்து செல்கிறேன்; நான் நேரடியாக இறைவனிடம் செல்கிறேன்; படைப்பின் ஒவ்வொரு அம்சத்திலும் நான் அவனைப் பார்க்கிறேன். அவன் நம் பிதா; அவன் மிக நெருக்கமானவர்களையும் விட நெருக்கமானவன், மிகப் பிரியமானவர்களையும்

விடப் பிரியமானவன், மற்ற எவரையும் விட மிகவும் நிஜமானவன். அறியப்படாததும் அறியப் படுவதுமாகிய இரண்டும் அவனே.

இறைவன் உங்களுக்காக அழுகிறான். நீங்கள் அவனிடமே திரும்பி வர வேண்டும் என அவன் விரும்புகிறான். அது உங்கள் பிறப்புரிமை. என்றாவது ஒரு நாள் நீங்கள் இந்த உலகத்தை விட்டுப் போயே ஆக வேண்டும்; இது உங்களுக்கு நிரந்தரமான இடம் இல்லை. உலக வாழ்க்கை யானது ஒரு பள்ளிக்கூடம் மட்டுமே; இங்கே நாம் எப்படி நடந்து கொள்கிறோம் என்பதைக் காண்பதற்காக அவன் நம்மை இங்கே அனுப்பி இருக்கிறான்; அவ்வளவுதான். இறைவன் தன்னை வெளிப்படுத்துவதற்கு முன்பு, அவன் தெரிந்து கொள்ள விரும்புவது—நாம் உலகத் தின் பகட்டான புகழை விரும்புகிறோமா அல்லது இவ்வாறு கூறுவதற்கு வேண்டிய ஞானத்தைப் பெற்று விட்டோமா:

"இறைவா, நான் இவை எல்லாவற்றையும் கடந்து விட்டேன். நான் உங்களுடன் மட்டும் தான் பேச விரும்புகிறேன். எனக்கு உண்மை யிலேயே சொந்தமானது எல்லாமே நீங்கள்தான் என்று எனக்குத் தெரியும். எல்லோரும் சென்று விட்டபொழுதும், நீங்கள் என்னுடன் இருப்பீர் கள்."

மனிதர்கள் திருமணத்திலும், செல்வத்திலும், குடியிலும் மற்றும் பிறவற்றிலும் இன்பத்தைத் தேடுகிறார்கள்; ஆனால் இப்படிப்பட்டவர்கள் விதி வசப்பட்ட கைப் பொம்மைகள். ஒரு முறை இந்த ஞானம் வந்துவிட்டால், ஒருவன் வாழ்க்கையின் உண்மையான காரணத்தை அறிகிறான், மேலும் இயல்பாகவே இறைவனைத் தேட ஆரம்பிக் கிறான்.

நாம் இழந்த தெய்வீகப் பரம்பரைச் சொத்தை உரிமை கோர வேண்டும். ஒருவன் எவ்வளவு சுயநலமில்லாமல் இருக்கிறானோ, மற்றவர் களுக்கு எவ்வளவு மகிழ்ச்சி அளிக்க முயல் கிறானோ, அந்த அளவிற்கு அதிகமாக அவன் இறைவனைப் பற்றி நினைப்பான். மேலும் உலக நோக்கங்கள் மற்றும் மனித ஆசாபாசங்களைப் பற்றி ஒருவன் எவ்வளவு அதிகம் நினைக் கின்றானோ அவ்வளவு தூரத்திற்கு அவனுடைய ஆத்ம ஆனந்தம் அவனிடத்திலிருந்து பின்ன டைந்து விடும். புலன்களின் சகதியில் உழன்று, ஒவ்வொரு திருப்பத்திலும், துன்பங்களால் நசுக்கப்படுவதற்காக நாம் இங்கே, உலகத்தில் அனுப்பப்படவில்லை. உலகத்தைச் சார்ந்துள்ளது எதுவும் தீயது, ஏனெனில் அது ஆத்மாவின் பேரின்பத்தை வெளிப்படுத்தாமல் அடக்குகிறது.

இறைவனைப் பற்றிய எண்ணங்களில் மனத்தை ஆழ்த்துவதில் பேரானந்தம் கிடைக்கிறது.

## ஆனந்தத்தை ஏன் தள்ளிப் போடுகிறீர்கள்?

ஏன் நீங்கள் முன்கூட்டியே சிந்திக்கக் கூடாது? ஏன் நீங்கள் தேவையற்றவற்றை மிக முக்கிய மானதாகக் கருதுகிறீர்கள்? அனேகர் காலை உணவு, மதிய சாப்பாடு, இரவு சாப்பாடு, வேலை, சமூகப் பணிகள் மற்றும் இம்மாதிரியானவற்றில் தான் கருத்தைச் செலுத்துகின்றனர். உங்கள் வாழ்க்கையை மிகவும் எளிமையாக்கி, உங்கள் முழு மனத்தையும் இறைவன் மீது செலுத்துங்கள். இந்த உலகமானது, இறைவனிடம் திரும்பிச் செல்வதற்கு, தயார் செய்து கொள்வதற்கான இடமாகும். அவனுடைய பரிசுகளை விட நாம் அவனை அதிகம் நேசிக்கிறோமா என்று அவன் தெரிந்து கொள்ள விரும்புகிறான். அவனே பிதா, மற்றும் நாம் அனைவரும் அவனுடைய குழந் தைகள். நம்முடைய அன்பைப் பெற அவனுக்கு உரிமை இருக்கிறது, மற்றும் அவனுடைய அன்பைப் பெற நமக்கும் உரிமை இருக்கிறது. நாம் அவனைப் புறக்கணிப்பதால்தான் நம்

தொல்லைகள் உண்டாகின்றன. ஆனால் அவன் எப்பொழுதும் காத்துக் கொண்டிருக்கிறான்.

நம் எல்லோருக்கும் இறைவன் இன்னும் கொஞ்சம் அறிவைக் கொடுத்திருக்கலாமே என்று மட்டுமே நான் விரும்புகிறேன். இறைவனை ஒதுக்கிவிடுவதற்கும் அல்லது அவனை ஒப்புக் கொள்வதற்கும் நமக்கு சுதந்திரம் உண்டு. ஆனால் இங்கே நாம் கொஞ்சம் பணத்திற்காக வும், கொஞ்சம் மகிழ்ச்சிக்காகவும், கொஞ்சம் அன்பிற்காகவும் திரும்பத் திரும்ப பிச்சை எடுத்துக் கொண்டு இருக்கிறோம். என்றைக் காவது ஒரு நாள் உங்களிடமிருந்து பறிக்கப் பட்டே ஆக வேண்டிய பொருட்களை ஏன் நீங்கள் வேண்டுகிறீர்கள்? எத்தனை காலம்தான் நீங்கள் பணம், நோய் மற்றும் இன்னல்களினால் துக்கப் பட்டுக் கொண்டு இருப்பீர்கள்? இறவாமையை யும் இறைவனுடைய சாம்ராஜ்யத்தையும் பற்றிக் கொள்ளுங்கள். அதுதான் உங்களுக்கு உண்மை யிலேயே தேவையானது.

## தெய்வீக சாம்ராஜ்யம் பணயம் வைக்கப்பட்டிருக்கிறது

நாம் இறைவனின் முழு சாம்ராஜ்யத்தை

அடைவதை உலகப்பற்று என்னும் ஒரு வலிய விஷயம் தடை செய்யக் கூடாது என்பதற்காக மகான்கள் பற்றின்மையை வலியுறுத்துகின்றனர். துறவின் பொருள், எல்லாவற்றையும் விட்டுவிட வேண்டும் என்பதல்ல; அது, நித்திய ஆனந்தத் திற்காக சிறிய இன்பங்களை விட்டு விடுவது எனப் பொருள்படும். இறைவனுக்காக நீங்கள் பணியாற்றும்பொழுது அவன் உங்களிடம் பேசு கிறான், மேலும் நீங்கள் அவனுடன் இடைவிடா மல் பேச வேண்டும். உங்கள் மனத்தில் உண்டா கும் எந்த எண்ணத்தையும் அவனிடம் கூறுங்கள். "இறைவா, தரிசனம் கொடு, தரிசனம் கொடு" என்று அவனிடம் கூறுங்கள். மௌனத்தைப் பதில் என்று எண்ணாதீர்கள். நீங்கள் விரும்பிய பொருளை உங்களுக்குக் கொடுத்து, நீங்கள் அவனது கவனத்தில் இருக்கிறீர்கள் என்பதை உங்களுக்கு தெரிவித்து அதன் மூலம் பதிலை முதலில் வெளிப்படுத்துவான். ஆனால் அவனுடைய பரிசுகளில் திருப்தி அடையாதீர்கள். அவனை அடையும்வரை, நீங்கள் திருப்தி அடைய மாட்டீர்கள் என்பதை அவனுக்குத் தெரியப்படுத்துங்கள். இறுதியாக அவன் உங்களுக்கு பதிலளிப்பான். உங்களுடைய மனக்காட்சியில் ஏதாவது ஒரு மகானின் முகத்தை நீங்கள் பார்க்கலாம், அல்லது ஒரு தெய்வீகக் குரல்

உங்களிடம் பேசுவதை நீங்கள் கேட்கலாம்; மேலும் நீங்கள் இறைவனுடன் தொடர்பு கொண்டிருக்கிறீர்கள் என்பதைத் தெரிந்து கொள்வீர்கள்.

தன்னைத்தானே கொடுப்பதற்காக, இறைவனைத் தூண்டுவதற்கு நிலையான, முடிவில்லாத ஆர்வம் வேண்டும். அவ்விதமான ஆர்வத்தை உங்களுக்கு யாரும் கற்றுக் கொடுக்க முடியாது. நீங்களே அதை வளர்த்துக் கொள்ள வேண்டும். "நீங்கள் ஒரு குதிரையை நீர்நிலைக்கு கொண்டு செல்லலாம். ஆனால் நிங்கள் அதை குடிக்க வைக்க முடியாது." இருந்தாலும் குதிரைக்குத் தாகம் எடுக்கும்பொழுது அது ஆர்வத்துடன் தண்ணீரைத் தேடுகிறது. எனவே, இறைவன் மீது உங்களுக்குத் தணியாத தாகம் இருக்கும் பொழுது, நீங்கள் மற்ற எதற்கும் — உலக சோதனைகள் அல்லது சரீர சோதனைகள் — தேவையற்ற முக்கியத்துவம் கொடுக்காமல் இருந்தால், அப்பொழுது அவன் வருவான். நினைவில் வைத்துக் கொள்ளுங்கள், உங்களுடைய இதயத்தின் அழைப்பு தீவிரமாக இருந்தால், நீங்கள் எந்தவித சாக்கையும் ஒத்துக் கொள்ளாமல் இருந்தால், அப்பொழுது அவன் வருவான்.

இறைவன் பதில் அளிப்பானா என்ற சந்தேகத்தையும் நீங்கள் உங்கள் மனத்திலிருந்து

கண்டிப்பாக நீக்க வேண்டும். அனேகர் அவர் களுடைய அவநம்பிக்கையால் எந்தப் பதிலும் பெறுவதில்லை. நீங்கள் ஏதோ ஒன்றை பெறத் தான் போகிறீர்கள் என்று முழுமையாக தீர்மானித்துவிட்டால், உங்களை எதுவும் தடுக்க முடியாது. நீங்கள் முயற்சியை விட்டுவிடும் பொழுதுதான் உங்களுக்கு எதிராக நீங்கள் தீர்ப்பு எழுதுகிறீர்கள். வெற்றி காணும் மனிதன் "முடியாது" என்னும் வார்த்தையை அறிய மாட்டான்.

நம்பிக்கைதான் உங்களுக்குள் இருக்கும் இறைவனின் எல்லையற்ற சக்தியாகும். இறை வனுக்குத் தன்னுடைய உணர்வுநிலை மூலம் எல்லாவற்றையும் படைத்தவன் அவனே என்பது தெரியும்; எனவே நம்பிக்கை என்பது, நாம் இறைவனின் பிரதிபிம்பமாக படைக்கப்பட்டிருக் கிறோம் என்ற அறிவும் திடமான எண்ணமும் தான். நமக்குள் இருக்கும் அவனுடைய உணர்வு நிலைக்கு ஏற்ப நாம் இணக்கமானால், நாம் உலகங்களைப் படைக்க முடியும். நினைவில் கொள்ளுங்கள், உங்களுடைய இச்சாசக்தியில் தான் இறைவனின் எல்லாம்வல்ல சக்தி உள்ளது. உங்களுக்குத் தொடர்ந்து பலவிதமான இன்னல் கள் வந்தாலும் கூட, நீங்கள் விடாமுயற்சியுடன்

தொடர்ந்தால்; உங்கள் மனம் திடமாகி விட்டால், பின்பு இறைவன் உங்களுக்குப் பதிலளிப்பதை நீங்கள் காண்பீர்கள்.

இறைவன், பிரபஞ்ச அலையதிர்வாக இருப்பது தான், வார்த்தை (ஓம்). இறைவன் ஓங்காரமாக எல்லா அணுக்களின் மூலமாகவும் ஒலித்துக் கொண்டிருக்கிறான். இந்தப் பிரபஞ்சத்திலிருந்து வந்து கொண்டிருக்கும் ஒரு நாதத்தை, ஆழ்ந்து தியானிக்கும் பக்தர்கள் கேட்க முடியும். இப் பொழுது, இந்தக் கணத்தில், நான் அவனுடைய குரலைக் கேட்டுக் கொண்டிருக்கிறேன். நீங்கள் தியானத்தில் கேட்கும் பிரபஞ்ச ஒலி* தான் இறைவனின் குரலாகும். அந்த ஒலிதான் உங்களுக்குப் புரிகின்ற மொழியாக, தானாக மாறுகிறது. நான் ஓங்காரத்தைக் கேட்கும் சமயத்தில், எப்பொழுதாவது இறைவனிடம் எதைப் பற்றியாவது கூறும்படி கேட்கும்பொழுது அந்த ஓம் ஒலியானது ஆங்கிலம் அல்லது வங்காள மொழியாக மாறி மிகச் சரியான போதனைகளை எனக்குக் கூறும்.

இறைவன், மனிதனுடைய உள்ளுணர்வு மூலமாக அவனுடன் பேசுகிறான். நீங்கள்

---

* *ஓம்*, உணர்வு பூர்வ, அறிவுபூர்வ, பிரபஞ்ச அதிர்வலை அல்லது பரிசுத்த ஆவி

பிரபஞ்ச அதிர்வை எப்படிக் கேட்பது* என்பதை கற்றுக் கொண்டால், அவனுடைய குரலைக் கேட்பது மிகவும் சுலபம். ஆனால் பிரபஞ்ச ஆகாயவெளியின் மூலம் நீங்கள் சாதாரணமாக இறைவனிடம் பிரார்த்தித்தாலும் கூட, உங் களுடைய இச்சாசக்தி போதுமான வலிமையுடன் இருந்தால், பரவெளியே அவனுடைய குரலில் மறுமொழி அளிக்கும். அவன் எப்பொழுதும் உங்களுடன் பேசிக் கொண்டு இருக்கிறான். இவ்வாறு கூறுகிறான்:

"என்னைக் கூப்பிடுங்கள், உங்களுடைய உள்ளத்தின் ஆழத்திலிருந்தும், உங்களுடைய இருப்பின் மையத்திலிருந்தும், உங்களுடைய ஆத்மாவின் ஆழத்திலிருந்தும் விடாப்பிடியுடன், மாட்சிமையுடன், தீர்மானத்துடன், எத்தனை முறை நான் பதிலளிக்காமல் இருந்தாலும் கூட நீங்கள் என்னைத் தேடிக் கொண்டே இருப்பீர்கள் என்ற உங்கள் இதயத்தில் திடமான உறுதியுடன் என்னுடன் பேசுங்கள். உங்கள் இதயத்தில் நீங்கள் இடைவிடாது இரகசியமாக என்னிடம், 'ஓ, என் மௌன அன்பனே, என்னுடன் பேசு,' எனக் கூறினால் என் பக்தனே, நான் உன்னிடம் வருவேன்."

---

* *யோகதா சத்சங்க பாடங்களில்* கற்றுத் தரப்படும் ஒரு பழமையான உத்தி மூலமாக.

ஒரு தடவை இந்த மறுமொழி உங்களுக்குக் கிடைத்துவிட்டால் நீங்கள் அவனிடமிருந்து மீண்டும் பிரிக்கப்பட்டுவிட்டதாக உணரவே மாட்டீர்கள். இந்த இறை அனுபவம் எப்பொழுதும் உங்களுடனேயே தங்கி இருக்கும். ஆனால் அந்த "ஒரு தடவை" தான் சிரமமானது. ஏனெனில் இதயமும் மனமும் நம்புவதில்லை, நம்முடைய முந்தைய லௌகீக நம்பிக்கைகளினால் சந்தேகம் நுழைகிறது.

## உண்மையான பக்தர்கள் இதயத்தின் மௌனக் குரலுக்கு இறைவன் பதிலளிக்கிறான்.

இறைவன், ஜாதி, மத, இன, நிற பேதமின்றி ஒவ்வொரு மனிதனுக்கும் பதிலளிப்பான். வங்காளத்தில் ஒரு பழமொழி உள்ளது. அதாவது, நீங்கள் இறைவனை ஜகன் மாதாவாக நினைத்து ஆத்மார்த்தமான அழைப்பை விடுத்தால், அவளால் மௌனமாக இருக்க முடியாது. அவள் பேசித்தான் ஆக வேண்டும். என்ன அழகான பாவனை!

இன்று நான் எனக்குள் தோன்றி, உங்களுக் குக் கூறிய எல்லா விஷயங்களையும் எண்ணிப்

பாருங்கள். நீங்கள் உங்கள் கோரிக்கைகளில் தொடர்ந்து விடாப்பிடியுடன் இருந்தால், இறைவன் உங்களுக்கு பதில் அளிப்பான் என்பதில் நீங்கள் இனி எப்பொழுதும் சந்தேகப் படக் கூடாது. "ஒருவன் தன் சிநேகிதனோடே பேசுவது போல, கர்த்தர் மோசேயோடே முகமுகமாய்ப் பேசினார்."*

---

* *யாத்திராகமம்* 33:11 (பைபிள்).

# ஆசிரியரைக் குறித்து

*"பரமஹம்ஸ யோகானந்தரின் வாழ்க்கையில் இறையன்பு மற்றும் மனிதகுல சேவை ஆகிய குறிக்கோள் பரிபூரணமாக வெளிப்பட்டது....தன் வாழ்க்கையின் பெரும்பகுதியை அவர் இந்தியாவிற்கு வெளியே கழித்தாலும் அவர் நம் மாபெரும் மகான்களின் மத்தியில் இடம் பெறு கிறார். அனைத்து மக்களையும் ஆன்ம யாத்திரை மார்க்கத்திற்கு ஈர்த்தவாறு அவருடைய திருப்பணி என்றும் குறைவின்றி ஒளிமயமாகத் தொடர்ந்து வளர்கிறது."*

யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்திய/ ஸெல்ஃப்-ரியலைசேஷன் ஃபெலோஷிப்பின் ஸ்தாபகர் மகாசமாதி அடைந்த இருபத்தைந் தாவது ஆண்டு நிறைவான 1977, மார்ச் 7 அன்று இந்திய அரசு அவரைக் கௌரவிக்கும் வண்ணம் நினைவுத் தபால் தலையை வெளியிட்டபோது மேற்கண்ட வாறு அவருக்குப் புகழாரம் சூட்டியது.

பரமஹம்ஸ யோகானந்தர் நம் மத்தியில் வாழ்ந்தபோது, ஓர் உலகக் குருவாக எண்ணற்ற ஆன்மாக்களுக்கு வழிகாட்டினார். அவர் வாழ்க்கையின் மிக உன்னத உண்மைகளை வாழ்ந்து போதித்தார். 1893ல் இந்தியாவிலுள்ள கோரக்பூரில் பிறந்த பரமஹம்ஸ யோகானந்தரை,

அவரது குரு 1920ல் அமெரிக்க ஐக்கிய நாட்டில் நடந்த சர்வதேச சமய மிதவாதிகளின் மகா சபைக்கு இந்தியப் பிரதிநிதியாக அனுப்பினார். அதைத் தொடர்ந்து, பாஸ்டன், நியூயார்க் மற்றும் ஃபிலடெல்ஃபியாவில் அவர் ஆற்றிய சொற் பொழிவுகள் ஆர்வத்துடன் வரவேற்கப்பட்டன. மற்றும் 1924ல் அமெரிக்க நாட்டின் பல பகுதிகளில் சொற்பொழிவாற்றும் பிரயாணத்தை மேற்கொண்டார்.

அடுத்த பத்து வருடங்களுக்கு பரமஹம்ஸஜி பரவலாகப் பிரயாணம் செய்து சொற்பொழிவுகள் ஆற்றி, வகுப்புகள் நடத்தி, ஆயிரக்கணக்கான ஆண்களுக்கும் பெண்களுக்கும் யோக விஞ்ஞான தியானம் மற்றும் சரிசமநிலையான ஆன்மீக வாழ்க்கையைப் பற்றி போதித்தார்.

1917ல் யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்தியவை ஸ்தாபித்து, 1925ல் ஸெல்ஃப்-ரியலைசேஷன் ஃபெலோஷிப்பின் சர்வதேச தலைமையகத்தை லாஸ் ஏஞ்ஜிலீஸில் நிறுவி, அவர் ஆரம்பித்த பணியானது, ஸ்ரீ ஸ்ரீ தயா மாதாவின் வழிகாட்டுதலால் தொடர்ந்து நடைபெறுகிறது. பரமஹம்ஸ யோகானந்தருடைய எழுத்து படைப்புக்கள், சொற்பொழிவுகள் மற்றும் இயல்பான பேச்சுக்கள் (வீட்டிலிருந்தே

படிப்பதற்கான பாடங்களின்* விரிவான தொகுதி கயையும் சேர்த்து) ஆகிய வற்றை வெளியிடு வதுடன், உலக முழுவதுமுள்ள ஆசிரமங்கள், கேந்திரங்கள் மற்றும் தியான மையங்கள் ஆகியவற் றையும்; துறவிகளுக்கான பயிற்சி நலத்தை பெற்றுத்தரவும்; அனைத்து தேசங்களுக்கிடையே பெரும் அமைதியையும், இணக்கத்தையும் பெற்றுத் தர உதவி புரிகின்ற ஒரு மார்க்கமாக சேவை செய்யும் உலகளாவிய பிரார்த்தனைக் குழுவையும் அவரது சமூகம் மேற்பார்வையிடுகிறது. யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்திய, இந்தியாவிலும் சுற்றியுள்ள பிரதேசங்களிலும் இறைவனை நாடுவோருக்கு உதவி புரிகிறது.

க்வின்ஸி ஹௌ, ஜூனியர், பிஎச். டி., புராதன மொழிகள் பேராசிரியர், ஸ்க்ரிப்ஸ் கல்லூரி, எழுதியுள்ளார்: "பரமஹம்ஸ யோகானந்தர், இந்தியாவின் நிலைத்த வாக்குறுதியான இறை

---

* இந்தப் பாடங்கள், பரமஹம்ஸ யோகானந்தரால் போதிக்கப்பட்ட ஆன்மீக வாழ்க்கைக் கலையையும் யோக தியான உத்திகளையும், *கிரியா யோகத்தையும்* சேர்த்து அளிக்கின்றன. புராதன ஆன்மீக விஞ்ஞானமாகிய *கிரியா யோகத்தை* ஈடுபாட்டுடன் செய்யும் பயிற்சியானது, இறைவனை பற்றிய நேரடியான சொந்த அனுபவத்தை அளிக்கும். இப்பாடங்கள் பற்றிய தகவல் யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்தியவிடமிருந்து கிடைக்கும்.

அனுபூதியை மட்டுமல்லாமல், வாழ்க்கையின் அனைத்துத் துறைகளிலும் இருக்கும் ஆன்மீக நாட்டம் உள்ளவர்கள், அக்குறிக்கோளை நோக்கி விரைவாக முன்னேற்றம் காண்பதற்கான ஒரு நடைமுறை ஏற்பாட்டையும் மேற்கு நாடுகளுக்கு கொடுத்துள்ளார். தொடக்கத்தில் மேற்கில், இந்தியாவின் ஆன்மீகப் பரம்பரைச் செல்வமானது அதன் அதிஉன்னத மற்றும் கோட்பாட்டு நிலையில் மட்டுமே பாராட்டப்பட்டது. ஆனால் இன்றோ அது, இறைவனை, மேலுலகில் அல்லாது இங்கேயே இப்போதே அறியவிரும்பும் அனைவருக்கும் பயிற்சிக்காகவும் அனுபவத்திற்காகவும் எளிதில் அணுகும்படி உள்ளது.... ஒருமித்த சிந்தனைக்கான மிக உயர்ந்த வழிமுறைகளை யோகானந்தர் அனைவருக்கும் கைக்கெட்டும் வகையில் வைத்துள்ளார்."

பரமஹம்ஸ யோகானந்தரின் வாழ்க்கையும் போதனைகளும் அவருடைய *ஒரு யோகியின் சுயசரிதத்தில்* விவரிக்கப்பட்டிருக்கிறது. 1946ல் அப்புத்தகம் வெளியிடப்பட்டதிலிருந்து ஆன்மீகத் துறையில் ஒரு காவியமாக விளங்குகிறது. மேலும் தற்போது உலகமுழுவதும் உள்ள பல கல்லூரி களிலும் பல்கலைக்கழகங்களிலும் பாடப் புத்தகமாகவும் கலந்தாராய்வு பணிக்காகவும் பயன்படுத்தப்படுகிறது.

# யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்தியவின் இலட்சியங்களும் குறிக்கோள்களும்

வகுத்தவர்
ஸ்ரீ ஸ்ரீ பரமஹம்ஸ யோகானந்தர்,
குருதேவர் மற்றும் ஸ்தாபகர்

*ஸ்ரீ ஸ்ரீ தயா மாதா, சங்கமாதா மற்றும் தலைவி*

இறையனுபவத்தை நேரடியாகத் தனிப்பட்ட முறையில் அடைய உதவும் நிச்சயமான விஞ்ஞான முறைகள் பற்றிய அறிவை உலக நாடுகளிடையே பரப்புதல்.

சொந்த முயற்சியின் மூலம் பரிணாம வளர்ச்சி அடைந்து, மனிதனின் வரம்பிற்குட்பட்ட நிலையற்ற உணர்வை இறை உணர்வாக்குவதுதான் வாழ்க்கையின் நோக்கம் என்பதைப் போதிப்பது; இந்த நோக்கத்திற்காக, இறைதொடர்பு கொள்ள வைக்கும் யோகதா சத்சங்க ஆலயங்களை நிறுவுவதுடன் மனிதர்களின் இல்லங்களிலும் இதயங்களிலும் இறைவனின் தனித்தனி ஆலயங்களை நிறுவ ஊக்கமளித்தல்.

பகவான் கிருஷ்ணரால் போதிக்கப்பட்ட ஆதி யோக முறைக்கும் இயேசு கிறிஸ்துவினால் போதிக்கப்பட்ட ஆதி கிறிஸ்துவ சமயத்திற்கு

மிடையே உள்ள முழுமையான இணக்கத்தையும் அடிப்படையான ஒருமையையும் வெளிப்படுத்துதல்; மற்றும் சத்தியத்தின் இந்தக் கொள்கைகளே எல்லா உண்மையான சமயங்களுக்கும் பொதுவான விஞ்ஞான பூர்வமான அடிப்படை என்பதைக் காண்பித்தல்.

உண்மையான எல்லா சமய நம்பிக்கைகளும் முடிவில் இட்டுச் செல்லும் ஒரே தெய்வீகப் பெருவழியைச் சுட்டிக் காண்பித்தல்: இப்பெருவழி, நாள்தோறும் விஞ்ஞான பூர்வமாக பக்தியுணர்வுடன் இறைவனைத் தியானித்தலாகும்.

மனிதனை, அவனுடைய மூவகைத் துன்பங்களான உடல் நோய், மன அமைதியின்மை, ஆன்மீக அறியாமை இவைகளிலிருந்து விடுவித்தல்.

"எளிய வாழ்க்கை மற்றும் உயர்ந்த சிந்தனை"யை ஊக்குவித்தல்; அனைத்து மக்களிடையேயும் அவர்களது ஒற்றுமையின் நிரந்தர ஆதாரத்தை-கடவுளுடன் உள்ள உறவைப் போதிப்பதன் மூலம் சகோதரத்துவ உணர்வைப் பரப்புதல்.

உடலை விட உள்ளம் உயர்வானது, உள்ளத்தைவிட ஆன்மா உயர்வானது என்பதை எடுத்துக் காட்டுதல்.

நன்மை மூலமாகத் தீமையையும், மகிழ்ச்சி யின் மூலமாகத் துயரத்தையும், அன்பின் மூல மாகக் கொடுமையையும், ஞானத்தின் மூலமாக அஞ்ஞானத்தையும் வெல்லுதல்.

சமயம், விஞ்ஞானம் இரண்டையும் அவற்றின் அடிப்படைச் சித்தாந்தங்களின் ஒற்றுமையைப் புரிந்து கொள்வதன் மூலம் ஒன்றுபடுத்தல்.

மேலை நாடுகள் மற்றும் கீழை நாடுகளுக் கிடையே கலாச்சாரம் மற்றும் ஆன்மீக அறிவை ஆதரித்தல், மேலும் அவைகளின் உத்தம தனித் தன்மை பொருந்திய குணங்களைப் பரிமாற்றம் செய்து கொள்ளுதல்.

மனித இனத்தைத் தன்னுடைய பெரிய ஆன் மாவாகக் கருதி சேவை செய்தல்.

## Books by Sri Sri Paramahansa Yogananda

ஒரு யோகியின் சுயசரிதம்
Man's Eternal Quest
The Divine Romance
Journey to Self-realization
Wine of the Mystic
The Science of Religion
Whispers from Eternity
Where There Is Light
Sayings of Paramahansa Yogananda
Scientific Healing Affirmations
Metaphysical Meditations
வெற்றியின் விதிமுறை
God Talks With Arjuna: *The Bhagavad Gita (A New Translation and Commentary)*

## Other Books from Yogoda Satsanga Society

The Holy Science *by Sri Sri Swami Sri Yukteswar Giri*
Paramahansa Yogananda: In Memoriam–*Personal Accounts of the Master's Final Days*
Only Love *by Sri Sri Daya Mata*
Finding the Joy Within You by Sri Sri Daya Mata
God alone: The Life and Letters of a Saint *by Sri Gyanamata*
"Mejda": Sri Sri Paramahansa Yogananda—His Family and Early Life *by Sananda Lal Ghosh*

Some of the above-mentioned books are also published in Hindi, Bengali, Gujarati, Kannada, Malayalam, Marathi, Oriya, Tamil, and Telugu. For a complete list of books and audiocassettes, write to Yogoda Satsanga Society of India at the address given below:

*Yogoda Satsanga Society of India*
Paramahansa Yogananda Path, Ranchi 834001,
Jharkhand Tel. (0651) 2460071, 2460074, 2461578

# Yogoda Satsanga Lessons

Confidential Spiritual Instructions in Self-realization

by

Sri Sri Paramahansa Yogananda

The yoga teachings of Paramahansa Yoganandaji are available to all truth seekers. Whatever your own religious affiliation, you will benefit from these non-sectarian and scientific instructions.

The Lessons offer practical wisdom for everyday living, and give illuminating instructions in attaining communion with God—the Source of all aid and solace.

*Yogoda Satsanga Lessons* in Self-realization have won world-wide acclaim. Here at long last a great master of yoga have committed India's ancient, but often misrepresented, science of religion to the written word with the indisputable authority of divine realization.

---

*இதே ஆசிரியரால்...*

## ஒரு யோகியின் சுயசரிதம்

### அருளியவர் ஸ்ரீ ஸ்ரீ பரஹம்ஸ யோகானந்தர்

*ஒரு யோகியின் சுயசரிதம்*, இந்தியாவின் ஞான ஒளி பெற்ற மகான்களிடம் பரமஹம்ஸ யோகானந்தர் பயிற்சி பெற்ற வருடங்கள் பற்றிய கவர்ந்திழுக்கும் உள்ளார்ந்தக் கதையாகும். மனித ஆன்மாவின் இயல்பார்ந்த ஏக்கங்கள் முதல் பரவியல் தத்துவத்தின் உன்னத காட்சிகள் வரை, அனைத்து மதங்களுக்கும், அனைத்து வாழ்க்கைக்கும் அடிப்படையாக உள்ள பொதுவான நியதிகளை அறிந்து கொள்வதற்கு இப்புத்தகம் அரிய உள்நோக்கை அளிக்கிறது. மேலும் நமது அணுயுகத்தில் அவற்றின் ஆழ்ந்த பொருத்தத்தையும் காட்டுகிறது.

ஆன்மீகத் துறையில் ஒரு காவியமாகக் கருதப்படும் *ஒரு யோகியின் சுயசரிதம்*, கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும் ஒரு பாடப்புத்தகமாக உலக முழுவதும் பயன்படுத்தப்படுகிறது.

---

**"இம்மகானுடைய சுயசரிதம், உள்ளத்தைக் கொள்ளை கொள்ள வல்லது."** — தி டைம்ஸ் ஆஃப் இந்தியா

**"ஓர் அரிய தொகுப்பு."**— தி நியூயார்க் டைம்ஸ்

**"உள்ளத்தைக் கவர்கின்ற தெளிவான குறிப்புரைகள் கூடிய புத்தகம்."**— நியூஸ்வீக்

**"ஆங்கிலத்திலோ அல்லது பிற எந்த ஐரோப்பிய மொழியிலோ, யோகம் பற்றிய இது போன்ற படைப்பு இதற்கு முன்னர் இருந்ததே இல்லை."**

— கொலம்பியா யூனிவர்சிடி பிரஸ்

*கிடைக்குமிடம்-உள்ளூர் புத்தக நிலையம், அல்லது*

Yogoda Satsanga Society of India
Paramahansa Yogananda Path, Ranchi 834001 Jharkhand
Tel.: (0651) 2460071, 2460074, 2461578

***இறைவனுடன் பேசவும், நமது பிரார்த்தனைகளுக்குத் திட்டவட்டமான பதில்களைப் பெறவும் உண்மையிலேயே முடியுமா?***

இந்த முதல்தர வழிகாட்டியில், ஒரு புகழ்பெற்ற ஆன்மீக ஆசான் இதற்கும் மற்ற வினாக்களுக்கும் பதிலளிக்கிறார். உலக முழுவதிலும் ஆன்மீக நாட்டம் உள்ளவர்களால் விரும்பப்படுபவர். இறைவனுடன் ஆழ்ந்த, நிறைவுடைய தனிப்பட்ட உறவை உண்டாக்க உள்ளார்ந்த உறவுடன் எப்படி பிரார்த்தனை செய்வது என இறைவனுடன் நீங்கள் பேசுவது எப்படி நமக்குத் தெரிவிக்கிறது. ஒவ்வொருமுறை படிக்கும் பொழுதும் ஆர்வக் கிளர்ச்சி மற்றும் ஞானமாகிய புதிய ரத்தினங்களைக் கண்டுபிடிக்கக் கூடிய இப்புத்தகம், எப்போதும் அருகில் வைத்துக் கொள்ள வேண்டிய ஒன்றாகும்.



பரமஹம்ஸ யோகானந்தரின்
தெய்வீகப் பரம்பரைச் செல்வம்

Rs 5.00

*How You Can Talk With God* (Tamil)